## 12

# வாழைக்குலை

**ஜா**ர்ஜ் டவுனிலும், திருவல்லிக்கேணியிலும் பத்துக் குடும்பங்களில் ஒன்றாக ஒண்டிக்கொண்டு இத்தனை வருஷங்கள் வாழ்ந்திருந்தது எனக்குச் சலித்துவிட்டது.

“சந்தையில் குடியிருக்கிற மாதிரி இல்லாமல், சின்ன வீட்டில், தனிக்குடித்தனமாய், அக்கடா என்று இருக்கமாட்டோமா?” என்ற ஏக்கம் தோன்றி, ஆலமரமாய் வளர்ந்திருந்ததன் காரணமாக அந்த வருஷம் நான் ரிடையர் ஆனவுடன் செய்த முதல் காரியம் அலையோ அலை என்று அலைந்து நங்கநல்லூரில் ஒரு வீட்டின் கீழ்ப் போர்ஷனுக்குக் குடிபெயரத் தீர்மானம் செய்து, அட்வான்ஸ் கொடுத்ததுதான்.

“ஜே...ஜேன்னு மனுஷா நடுவே வாழ்ந்துட்டு, அத்வானம் மாதிரி ஒரு இடத்துக்குப் போனா சரிப்படுமா, கோபு?” என்று அம்மா காமாட்சியும்...

“எங்க காலேஜ், ஸ்கூல் போக வசதியிருக்குமாப்பா?” என்று பையன்களும் கேட்டபோது,

“நங்கநல்லூர் முன்னப்போல இல்லைம்மா. பெரிய ஊர் மாதிரி வளந்துடுத்து. பக்கத்துலயே ராஜராஜேஸ்வரி கோவில், கடைத்தெருவு எல்லாம் இருக்கு. இப்போ கொடுக்கற வாடகையை விடக் கம்மியா கொடுத்தாலும் இதுக்குமேல் சௌரியமா இருக்கலாம்” என்றும், “உனக்கு ஜெயின் காலேஜ் போக நாலடில ஸ்டேஷன் இருக்குடா. இவனுக்கு மாம்பலம் ராமகிருஷ்ணாவுக்குப் போறதுக்கும் வரத்துக்கும் ரயில் ரொம்ப சௌரியம்...” என்று மகன்களிடமும் சமாதானம் சொல்லி ஒரு நல்ல நாளில் நங்கநல்லூருக்குக் குடும்பத்துடன் குடிபெயர்ந்தேன்.

திருவல்லிக்கேணி புறாக்கூண்டைவிட இந்த வீடு உண்மையிலேயே சௌகரியமாக இருந்தது.

மாடியில் ஒரு குடித்தனம், கீழே நாங்கள். வீட்டுச் சொந்தக்காரர் வடக்கே இருந்ததால் அவர் தொந்தரவும் இல்லை.

வீட்டுக்குக் குடிவந்து ஒரு வாரகாலம் ஆகியிருக்கும். என் நண்பர் ஒருவர் வந்தவர், "வீட்டைச் சுத்தி நிறைய இடம் இருக்கே? கொத்தி விதை போட்டா உங்க குடும்பத்துக்குத் தேவையான காய்கறி கிடைக்குமே! என்ன இருந்தாலும் ஆத்துலேயே விளைஞ்சு சாப்பிடற காய்க்குத் தனி ருசிதான்" என்று சொல்லித் தோட்டம் போடவேண்டும் என்ற ஆசையை எழுப்பிவிட்டார்.

அன்று இரவு சாப்பாட்டுக்கடை ஆனதும் பையன்கள், அம்மா, சகதர்மிணி எல்லோரையும் கூட்டி தோட்டம் போடத் திட்டம் தீட்டினேன்.

"வாசல்லே நாலு செம்பருத்தி, அரளி, ரோஜாச் செடி வெச்சா பூஜைக்கு தாராளமா பூ கிடைக்கும். பின்னாலே ஒரு துளசிமாடம் கட்டி துளசிச்செடி வெச்சுடணும். ரெண்டு நித்திய மல்லிச் செடி வெச்சா விசாலம் தலைக்கு நல்ல பூ கிடைக்கும். கொத்தவரை, வெண்டை, முள்ளங்கி விதைகளைப் பாத்தி கட்டி விதைக்கணும்; ஒரு ஓரமா கொத்திவிட்டுக் கீரை போட்டா அதுபாட்டுக்கு தனியா இருக்கும்...அன்னன்னிக்குப் புதுசா பறிச்சு சமைக்கலாம்..." ஒருத்தரையும் பேசவிடாமல் அம்மாவே 'மோனாபலி' செய்துகொண்டு பேசித் தீர்த்தாள்.

தோட்டக் காய்கறிகளை எடுத்து, ஒருநாள் வெண்டைக்காய் வதக்கல், மறுநாள் கொத்தவரைத் தனிக்கூட்டு, பச்சை பசேலென்று இன்னொரு நாள் கீரை மசியல்...ஆஹா...கற்பனை எனக்கு இனித்தது.

மறுநாள் வெயிலைப் பார்க்காமல் அருகில் இருந்த நர்ஸரிக்கு வேகுவேகென்று போனேன். கையிலிருந்த லிஸ்டைக் காட்டி அங்கிருந்த ஆளிடம் 'எடு' என்றேன். அவன் எடுத்தான். ஒரு பக்கமாக வைத்தான். பிறகு பில்லைக் கொடுத்தான். எனக்கு மயக்கம் வராத குறை! மொத்தம் அறுபத்தியெட்டு ரூபாய்! கேவலம் செம்பருத்திச்செடி ரூபாய் ஐந்து. மல்லி, ரோஜா எட்டிலிருந்து பத்து வரை. சிவசிவா...என்ன அக்கிரமம்! தோட்டக்காரன் வாயில் வந்தபடி திட்டாத குறையாய் முறைக்க, "பர்ஸை

வீட்டிலேயே வெச்சுட்டேன் போலேயிருக்கு...போய்க் கொண்டு வந்துடறேன்...” என்று அசடு வழிய சிரித்துவிட்டு நழுவினேன்.

வீட்டுக்குப் போய் அந்தத் தோட்டக்காரனை ஆசைதீர வைது தீர்த்தேன்.

அம்மா எனக்குப் பக்கவாத்தியம் வாசித்தாள்.

“நன்னா அறுபதும், எழுபதும் கொடுத்துச் செடி வாங்கினே... இங்கே என்ன சொந்த வீடு பாழ்பட்டுப் போறதா என்ன? கேடு கெட்ட செம்பருத்திக்கும் அரளிக்கும் அஞ்சு ரூபா கொடுத்து வாங்குவாளா என்ன? கெடந்து அலையறான்...நீ சும்மா இருடா கோபு...இங்கே அங்கே தெரிஞ்சவா ஆத்துலே ரெண்டு அடிக் கட்டை வாங்கி நட்டோம்னா ஆறே மாசத்திலே பூத்துக் குலுங்காதா என்ன, அவன் கெடக்கான்...”

அம்மாவின் பேச்சு எனக்குத் தெம்பாக இருந்தது. மறுநாள் மார்க்கெட்டில் ஒருவனிடமிருந்து இரண்டு ரூபாய்க்குக் காய்கறி விதைகளை வாங்கிவந்தேன். பிற்பகல் பூராவும் எதிர்சாரியில் இருந்த முட்புதர்களை வெட்டி வேலியில் இருந்த இண்டு இடுக்குகளில் அடைத்தேன். மாலைக்குள் வேலி ஒருவழியாய் ரெடியானது. ஆனால் இந்தக் கூத்தில் என் வேட்டி, பனியன் கை கால் தோல் அக்கக்காய் கிழிந்து போயின.

அந்த ஞாயிறு, பிள்ளைகளை வைத்துக்கொண்டு, மண் வெட்டி வாங்கி உற்சாகத்துடன் மண்ணைக் கொத்தி, பாத்தி கட்டி விதைகளை ஊன்றுவதற்குள் வீடு ரெண்டுபட்டுப் போயிற்று.

“பாத்தியைக் கோணலாகக் கட்டாதேடா! காலப் பாத்து வை...விசாலம் விதைகளை எடு...பக்கெட் கொண்டு வா...அப்படித் தண்ணி விடாதே...மெதுவாய்...ஆ...இப்படி...இப்படி...” அன்று இரவே எனக்குப் பச்சைக்கலரில் கனவு. தோட்டம் பூராவும் காய்கறிகள் காய்த்துத் தொங்குகின்றன. ஓடிஓடிப் பறித்து மாளாது போல விடாமல் கனவு.

‘இவன் ஆசையை நிராசையாக்கு’ என்று யாரோ ஏவினது மாதிரி அன்றிரவு மழை கொட்டோ கொட்டென்று கொட்டின போது தோட்டம் என்னாயிற்றோ என்று நான் பதைத்துக்கொண்டு கண் விழித்ததற்கு ஏற்ப காலையில் வீடு குளத்தில் மிதக்கும் தெப்பம் போல இருந்தது. வீட்டைச் சுற்றி முழங்கால் ஜலம்...

பாத்திகள் எங்கே? விதைகள் எங்கே? ஒன்றும் புரியவில்லை. தண்ணீரில் இறங்கி நான் சேற்றை வாரிப் பூசிக்கொண்டதுதான் மிச்சம்.

மறுநாள் தண்ணீர் வடிந்து பார்த்தால், கொத்திவிட்டுப் பாத்தி கட்டிய இடங்களெல்லாம் சமதரையாய் இருந்தன. விதை களை மழைஜலம் எங்கே அடித்துக்கொண்டு போனதோ?

எனக்கு ரொம்ப வருத்தம். நான்கு நாட்கள் சும்மா இருந்தவன் ஐந்தாம் நாள் வாங்கிவந்த விதைகளில் மிச்சம் இருந்த கீரை விதைகளை ஒரு பக்கமாய்க் கொத்தி விதைத்தேன்.

ஒரு வாரகாலத்தில் கீரை தளதளவென்று முளைத்துவிட்டது. எல்லாருக்கும் சந்தோஷம். 'முதல் நாள் கீரை மசியல்; அப்புறம் புளிக்கீரை; பொரித்தகுழம்பு ஒரு நாள்...கீரை வடை....' என்று என் கற்பனை லிஸ்ட் நீண்டுகொண்டே போனது.

இந்த அற்ப சந்தோஷம் மேற்கொண்டு இரண்டு நாட் களுக்குக்கூட நீடிக்கவில்லை. குடும்பத்தோடு, வீட்டைப் பூட்டிக் கொண்டு ஒரு கல்யாணத்துக்குப் போகவேண்டி வந்தது. காலை யில் போய்விட்டு மாலை வந்து பார்த்தால் கீரைப் பாத்தி மொட்டை.

"மே...மேனு ஆடு கத்தற சத்தம் கேட்டுது மாமி...என்னடானு எட்டிப் பார்த்தேன். நம்ப கீரைப்பாத்தியை காலி பண்ணிட்டு ஒரு கறுப்பு ஆடு கத்திண்டு இருந்தது...தடதடணு எறங்கி வந்து வெரட்டினேன்..." என்றாள் மாடிவீட்டு மாமி.

வேலி இடுக்கில் செருகியிருந்த முள் காய்ந்து போயிருக்கவே யாரோ அடுப்புக்குச் சுள்ளியாக உதவும் என்று இழுத்துக்கொண்டு போயிருக்கிறார்கள் போலிருக்கிறது.

பார்த்து, ஆட்டை விரட்டினவள், கொஞ்சம் முன்னாலேயே செயல்பட்டிருக்கக் கூடாதா என்று எனக்கு மாடி மாமி மேல் ஆத்திரம் எழுந்தது.

இரண்டு நாட்கள் போயிருக்கும். கை நிறைய காயவைத்த கடலையுடன் வந்தான் மூத்த மகன்.

"என்னடா?" என்றேன்.

"என் சிநேகிதன் வீட்டுல கடலைப்பயிர் பண்ணி எடுத் திருக்காப்பா...என்ன ருசியா இருக்கு தெரியுமா? 'உங்காத்துலயும் போடேண்டா'னு அவன் விதை கொடுத்திருக்கான்ப்பா..."

உருண்டை உருண்டையான நிலக்கடலைகளைப் பார்த்தேன். தோட்ட ஆசை மீண்டும் தலைதூக்கியது.

அன்றே மீண்டும் பாத்தி கட்டிக் கடலையை ஊன்றி னேன்.

நிலக்கடலை! பச்சையாகச் சுண்டலாம். வறுத்துத் தின்ன லாம். கடலை உருண்டையும் பிடிக்கலாம்.

கற்பனை பிரமாதமாக இருந்தது. உறங்கிவிட்டு எழுந்து பார்த்தால் அத்தனை விதைகளையும் பெருச்சாளி தோண்டித் தின்றிருந்தது. நாசமாய்ப்போக!

எனக்கும் தோட்டத்துக்கும் ராசி இல்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டேன்.

பத்து நாட்களாகியிருக்கும். விசாலத்தின் ஊரிலிருந்து மாமா அனுப்பினதாக ஒரு ஆள் வந்து சேர்ந்தான். தலையில் கோணிச் சாக்கு.

“எங்கேடா இவ்வளவு தூரம்?” என்றேன்.

“அம்மா காயிதம் போட்டிருந்தாங்களாம்...‘தோட்டம் போடப் போறோம், நல்லதா நாலு வாளக்கன்னு இருந்தா அனுப்புங்க’னு எளுதியிருந்தாங்களாம். நா என் புள்ளையெப் பாக்க வந்தேனுங்க, பெரியய்யா வாளக்கன்னு அனுப்பிச்சாங்க...”

அவன் பேசிக்கொண்டே சாக்கிலிருந்து ஏழு, எட்டு வாழைக் கிழங்குகளை எடுத்துவைத்தான்.

“இது ரெண்டும் மொந்தனுங்க. அது பூவன். இது ரஸ்தாளிங்க...” அவன் பேசப் பேச, போயிருந்த உற்சாகம் என்னை மீண்டும் தொற்றிக்கொண்டது.

“ஒரு அடி ஆளத்துக்குக் குளி போட்டு, ரெண்டு நாளு ஆறப்போடுங்க... பொறவு மணலும், எருவும் கலந்து குளிலே போட்டு இதுங்களை நடணும்...பத்து நாளு காயப்போடுங்க... அப்பால நிதம் நல்லா தண்ணி ஊத்துங்க...பத்தாம் மாசம் குலை தள்ளிடும்...”

அவன் வாய்க்குச் சர்க்கரைதான் போடவேண்டும். அவன் சொன்னபடியே செய்ததாலோ, இல்லை, ‘பாவம், இவன் பட்ட கஷ்டம் போதும், இனியாவது நல்ல பலனைக் கொடுப்போம்’

என்று பூமித்தாய் நினைத்ததாலோ என்னமோ, எட்டு மாசங்கள் ஆவதற்குள் வருவோர் போவோர் கவனத்தை ஈர்த்தன.

என் பெருமைக்கு அளவேயில்லை. ஒருத்தர் அந்த மரங்களின்மேல் கை வைக்காமல் பாதுகாத்தேன். அம்மா இலை அறுத்துவிடுவாளோ என்று பயந்து, குருத்து வெளியாகு முன்னால் இலையைக் கிழித்துவிடுவேன். யாரைப் பார்த்தாலும் என் இல்லத்து வாழைகள் பெருமைதான். "உங்களுக்கு எந்த ஜாதிக் கன்னு வேணும் சொல்லுங்கோ...எங்காத்திலே வாழைக் கன்னுங்க காடா வளந்திருக்கு...வாழைத்தார் போட்டுடுத்துன்னா எடுக்கலாம். இப்ப எடுத்தா தாய்க்கு பலம் குறையும்" என்று பீற்றிக்கொள்வேன்.

முதலில் கண்ணாடி இலை மொந்தன் வாழையில்தான் வந்தது. எல்லாவற்றையும் விட உயரமாயும், பருமனாயுமிருந்த அந்த மரத்தில் குலை வருவதற்கான அடையாளமாய் முதலில் சின்னக் கண்ணாடி இலை வந்ததும் நான் பூரித்துப் போனேன். மெள்ளமெள்ள வாழைப்பூவும் வெளியே பெரியதாய்த் தெரிந்தது. இன்னும் நான்கு நாளில் கீழே சரிந்துவிடும். பிறகு மடல்கள் பிரிந்து காய்கள் தெரிய ஆரம்பிக்கும். பூவின் அளவைப் பார்த்தால் நூறு காய்கள் தேறும்போலிருக்கிறதே! வாழைப்பூவை உசிலிக்கலாம். காய்களை நவ்வாலாகப் பறித்து ஒரு நாள் பொடிமாஸ், ஒருநாள் வதக்கின கறி—பிறகு வறுவல், இத்தனை செலவழித்தும் மிச்சம் இருப்பது மாடிவீடு, எதிர்வீடு என்று கொடுக்கக் காணும் போலிருக்கிறதே! பார்க்கலாம்...பார்க்கலாம்.

பொழுது விடிந்து பொழுது போனால் நான் வாழைக்காய் வறுவல், பஜ்ஜி கனவு காணத் தொடங்கினேன்.

அன்று வந்து சேர்ந்தார் விசாலத்தின் மாமா. காலையில் வியாபார விஷயமாய் வந்தவர் மாலையே ஊர் திரும்ப இருந்தவர், சும்மா இருக்காமல், இருந்த அரை நாழியில் தோட்டத்தில் தான் அனுப்பி வளர்ந்திருக்கும் வாழைகளைப் பார்க்கப் போனார். பார்த்தவர் திடுக்கிட்டார்.

"என்ன கோபு இது? வாழைத்தார் தெக்கு நோக்கிக் குலை தள்ளும்போல இருக்கே...இது குடும்பத்துக்கு ஆகாதேப்பா...? வீட்டை விட்டுக் கிளப்பும், இல்லைனா ஆத்துலேந்து யாரையாவது சுடுகாட்டுக்கு அனுப்பும். வாழைக்குலை மட்டும் தெக்கு நோக்கி சாயக்கூடாது...பல குடும்பத்துல இது பலிச்சு நா பாத்திருக்கேன்...

ஈஸ்வரக்ருபையால வேற பக்கமா குலை சாயணும்னு வேண்டிக்கோ...”

அவர் போய்விட்டார்.

பத்து தடவை வாழைமரத்தைச் சுற்றி வந்தேன். தெற்குப் பக்கமாகத்தான் பூ சாயும்போலத் தோன்றியது.

என்ன செய்வது?

வீட்டை விட்டுத் துரத்தும் என்றாரே? எவ்வளவு கஷ்டப்பட்டு குடிவந்த வீடு, எல்லா சௌகரியங்களும் நிறைந்த வீடு. குறைந்த வாடகை. இதைவிட்டால் வேறு இந்த மாதிரி கிடைப்பது கஷ்டம். என்ன செய்வது?

வீட்டை விட்டுத் துரத்தாவிட்டால் ஆள் ஒருத்தரை சுடு காட்டுக்குத் துரத்தும் என்றாரே! அது யார்? அம்மாவுக்கு வயசாயிற்றே, அவளாக இருக்குமோ? நினைத்தாலே பயமாக இருந்தது.

இரவெல்லாம் நான் தூங்கவேயில்லை.

வீடு மாறக்கூடாது, வீட்டில் ஒருத்தருக்கும் ஒண்ணும் ஆகக்கூடாது, பெரிய வாழைக்குலையும் வேண்டும்...என்ன பண்ணுவது? யோசித்தவன், விடிவதற்குள் ஒரு முடிவுக்கு வந்தேன்.

பிள்ளையை அழைத்து இரண்டு பெரிய கம்புகளை எடுத்துக் கொண்டு வரச் சொல்லிவிட்டு வாழைமரத்திடம் போனேன்.

‘குலை தெற்கு நோக்கிச் சாய்ந்தால்தானே வம்பு? மெள்ள அந்த வாழைப்பூவைத் தூக்கி, இலைக்கு அந்தப்பக்கம் சாய்த்து விடலாம். அப்புறம் வடக்குப் பார்த்துத்தானே குலை தள்ளும்’ என்று நினைத்தவன், “இந்தப்பக்கம் கம்பால வாழைக்குலையைத் தள்ளறேன்; நீ நடுவுல இருக்கற இலையக் கொஞ்சம் அழுத்தித் தழைடா...” என்றேன் மகனிடம்.

வாழைப்பூ அசைந்தது.

“ஆ... ஆ... மெள்ள... மெள்ள... அப்படித்தான்... இன்னும் கொஞ்சம் தூக்கி... மெள்ள...” எங்களைச் சுற்றிப் பெரிய கூட்டம் சேர்ந்துவிட்டது.

வாழைப்பூ ரொம்பப் பெரியதாக, கனமாக இருந்ததால் சுலபமாய் அந்தப் பக்கம் தள்ள முடியவில்லை.

"நீ குலையைக் கொஞ்சம் தூக்கி நெம்பிக்கோ... நா அந்தண்டை தள்ளி விட்டுடறேன்..."

பிள்ளை வளைய ஆரம்பித்திருந்த குலையின் தண்டில் கம்பை ஊன்றி இலையைச் சற்றே தூக்கினான்.

"அப்படித்தான்... அப்படியே இரு... மெள்ள... மெள்ள..." மூச்சைப் பிடித்துக்கொண்டு பூவின் வயிற்றில் கம்பை வைத்து நெம்பினேன். அது அசையவில்லை. இன்னும் கொஞ்சம் வேகமாய் ஜோராய் நெம்பி அந்தப் பக்கம் தள்ள முயற்சித்தபோது...

மளுக்... பொத்.

என் பத்து மாதக் கற்பனைகளைப் பொய்யாக்கிவிட்டு, நான் நெம்பின வேகத்தில், மரத்திலிருந்து அறுந்த அந்த பெரிய வாழைக் குலை பரிதாபமாய்க் கீழே விழுந்தது.

நான் என்ன செய்ய?

– இதயம் பேசுகிறது